3-1




உ

திருச்சிற்றம்பலம்

# சிவன் கோயிலில் வழிபடுவது எப்படி?

திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை இயற்றியது.

விளக்கம்:

சித்தாந்த வித்தகர்: தி. சு. கோவிந்தசுவாமி.


வெளியிட்டோர்:

திருவாலவாய்ச் சைவ சித்தாந்த சபை,

மதுரை.




[ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் குருபூசை இலவச வெளியீடு
முதற் பதிப்பு 2000 படிகள்]




கிடைக்குமிடம்:

சித்தாந்த வித்தகர்: தி. சு. கோவிந்தசுவாமி

செயலாளர்,

திருவாலவாய்ச் சைவ சித்தாந்த சபை,

29, 2 - வது தெரு,

ஜெய்ஹிந்துபுரம், மதுரை - 11.

2—8—1987.

சிவ மயம்

# சேர வாரும் சகத்தீரே !

''சைவ சமயமே சமயஞ் சமயாதீதப் பழம் பொருளைக்
கைவந்திடவே மன்றுள் வெளிகாட்டு மிந்தக் கருத்தை விட்டுப்
பொய் வந்துழலுஞ் சமய நெறி புகுத வேண்டா முத்தி தரும்
தெய்வ சபையைக் காண்பதற்குச் சேரவாருஞ் சகத்தீரே''

## சைவ சமயத்தினர்க்கு வேண்டுகோள் :

அன்புடையீர்!

வெளிநாட்டாரால் சூட்டப்பெற்று சில நூற்றுண்டுகட்குப் பின் வழக்கில் வந்துள்ள இந்து மதம் என்ற சொல் சைவ சமயத்தை மட்டும் குறிக்காது.

வைணவம், சுமார்த்தம், மத்வம், சில நவீன மதங்கள் ஆகியவை இச்சொல்லுக்குள் நுழைந்துள்ளன.

மேற்கூறிய மதங்களைச் சேர்ந்த அனைவரும் சமுதாய ரீதியில் ''இந்துக்கள்'' என்று ஒற்றுமையாக வாழ்வது சரியேயாகும். இந்து மதத்திற்கு என வழிகாட்டிகள் பலர் தோன்றி நமது நாட்டின் புராதனச் சமயமான சைவ சமயம் இன்னது எனத் தெரியாதவாறு பலவகைப் பிரசாரங்களால் குழப்புகின்றனர். இந்து மதப் பிரசாரத்தில் சைவசமயம் இன்னதெனப் புலப்படுத்துவதில்லை.

இந்து மதம் என்ற சொல் சிவன் கோயில்களில் மட்டும் மதக் கலப்படத்தையும், ஆக்கிரமிப்பையும் உண்டுபண்ணுகிறது.

சைவ சமய மக்களே!

நீங்கள் சைவ சமய நூல்கள், பத்திரிகைகள் சைவப் பிரசங்கங்கள் ஆகியவைகளைக் கற்றும், கேட்டும் சைவ சமயத்தை முறையாகக் கடைப்பிடிப்பதும், சிவன் கோயில்களில் ''இந்து மதம்'' என்ற போர்வையில் மதக் கலப்படப் பிரசாரமும், ஊடுருவலும் உண்டாகாதவாறு தடுத்துப் பாதுகாப்பதும் உங்களின் கடமையாகும்.

சிந்திப்பீர்!

''சாதனையின்றிச் சிந்தனையாற் பிரயோசனமில்லை!''

சிந்திப்போம்! செயல்படுவோம்!

தினசரிப் பிரார்த்தனை:—

வான்முகில் வழாது பெய்க! மலிவளஞ் சுரக்க! மன்னன்
கோன்முறை அரசு செய்க! குறைவிலாதுயிர்கள் வாழ்க!
நான்மறை அறங்கள் ஓங்க! நற்றவம் வேள்வி மல்க!
மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்!

2-8-87 } திருவாலவாய்ச் சைவ சித்தாந்த சபை,
மதுரை. } மதுரை.

---

''சைவசமயவளர்ச்சிக்கும், சிவன்கோயில் பாதுகாப்புக்கும் ஊர்தோறும் ''சைவ சித்தாந்தப்பேரவை'' ஒன்று அமைத்துச் செயல்படுவீர்''

---

ഉ

# சிவாலய தரிசனவிதி

(திரிசிரபுரம் மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை)



கதிரவ னெழுங்குங் காலம்
இரண்டரைக் கடிகை யென்ன
அதிர்புன லமையுந் தானம்
அடைந்துமெய்ச் சுத்தி செய்தே
முதிரனுட் டானம் செய்து
மொய்த்தகண் மணியும் பூண்டு
பிதிர்தலில் அன்பு வாய்ந்து
பிறங்குவார் குழாத்தி னேடும். 1.

—மயிலாடுதுறைப்புராணம்

விளக்கம் :

சூரியன் மறைவதற்கு இரண்டரை நாழிகைக்கு முன் (2½ நாழிகை 1 மணி) நீர்நிலையை அடைந்து உடம்பைத் தூய்மை செய்து விதிப்படி அனுட்டானம் செய்து, உருத்திராக்கம் தரித்துக் கொண்டு நீங்காத அன்புடைய சிவநேசச் செல்வர்களோடும் (திருக் கோயிலுக்குப் போகவேண்டும்)

குறிப்பு : சிவதரிசனம் அதிகாலையில் செய்தால் இரவிலே செய்த பாவம் போம். மதியம் செய்தால் பிறந்த நாள் தொடங்கிச் செய்த பாவம் போம். மாலைக் காலத்தில் செய்தால் ஏழு பிறவிகளிற் செய்த பாவம் போம்.

சோமவாரம், அட்டமி, பிரதோஷம், பௌர்ணமி, அமாவாசை, திருவாதிரை, உத்தராயணம், தக்ஷிணயணம், சித்திரை விஷு, ஐப்பசி விஷு, மாதப்பிறப்பு, சூரியகிரகணம், சந்திர கிரகணம், சிவராத்திரி முதலிய புண்ணிய காலங்களில் சிவ தரிசனஞ் செய்தால் மிக மேலாகிய புண்ணியங்கள் உண்டாகும்.

பிரதோஷ காலத்திலே மெய்யன்போடு சிவதரிசனஞ் செய்யின் கடன், வறுமை, நோய், பயம், துன்பம், மரண வேதனை, பாவம் என்னும் இவைகளெல்லாம் தீங்கும். முத்தி

சித்திக்கும். சைவ சமயிகள் விபூதி உருத்திராக்கம் மட்டுமாவது தரித்துக் கொண்டால் போதுமானது. அவர்கள் சிவனடியார்களே எனச் சைவநூல் கூறும்.

தெங்கங்காய் அரம்பை யின்ற தீங்கனி நறுங்கற் பூரம்
துங்கமா ரடைகா யேனும் கிடைத்ததாக் கனிக ளேனும்
பங்கஞ்சா ராது கொண்டு பரமனா லயத்திற் செல்க
அங்கவை அரிதேல் முற்றத் தமைதரு துரா லொழிக்க 2

தேங்காய், இனிய வாழைப்பழம், கற்பூரம், பாக்கு, வெற்றிலை அல்லது கிடைத்த கனிகள் ஆகிய இவற்றை அரைக்குக் கீழ்படாது மேலே உயர்த்தப்பெற்ற கைகளால் ஏந்திக் கொண்டு போகக்கடவர் [சிவபெருமானது திருக்கோயிலுக்கு வெறுங்கையோடு போகக் கூடாது. பொருளில்லாதவன் இலை, மலர் கொடுத்து வணங்க வேண்டும். அதுவுங் கூடாதவன்] சந்நிதியில் உள்ள செத்தை முதலியவற்றைப் போக்கி வணங்க வேண்டும்.

இன்மறை புகழுந் தூல லிங்கமென் றுரைக்கப்பட்ட
கனககோ புரமுன் தாழ்ந்து கனிந்தசிந் தையினுட் புக்குப்
பனகபூ டணவே ரம்பப் பண்ணவன் பாதந் தாழ்ந்து
மனனமா நந்திப் புத்தேள் மருங்கடைந் திறைஞ்சல் செய்து 3

தூலலிங்கம் என்று சைவ நூல்களிற் கூறப்பட்ட திருக்கோபுரத்தைத் தாழ்ந்து வணங்கி, கனிந்த சிந்தையினுடன் உள்ளே புகுதல் வேண்டும். அங்கு முதலில் பாம்பை அணிந்துள்ள விநாயகப் பெருமானையும், இடப தேவரையும் வணங்கி அப்பால் கோபுர வாயிலில் எழுந்தருளியுள்ள அதிகார நந்தீசுவரையும் வணங்கி,

குறிப்பு : இடபத்தையும் நந்தி என்று கூறுவர்.

''அடியேனேன் சிவ பிரானைச் சேவிப்பான் அணைந்தேன் தீமை
கடிதரும் விடைகொ டுத்துக் கடைக்கணித் தருளு'' கென்று
படியற இரந்து வேண்டிப் பயத்தொடு பத்தி மேவ
''முடிய நீ போய்வா'' என்று மொழிந்தருளியதா எண்ணி. 4

அடியேன் சிவபெருமானை வணங்கிவருவதற்கு அனுமதி செய்தருளும் எனப் பிரார்த்திக்க, அவர் ''நீ போய்வா'' என்று உத்தரவு இட்டதாகப் பாவித்துக்கொண்டு பயபக்தியுடன் உள்ளே செல்ல வேண்டும்.

இருகரங் குவித்துட் புக்காங் கிலங்கநின் ருடு மையர்
பொருவில் குஞ்சிதத்தாள் போற்றிப் புண்ணியச் சிவபிரான் முன்
மருவியங் காதி சைவன் மலர்க்கையி னளைத்து நல்கி
யொருவற வனையான் செய்யும் உபசாரம் அனைத்து நோக்கி 5

(உள்ளே செல்லுங்கால்), இருகைகளையும் குவித்துக் கொண்டு சபாமண்டபத்திலே நடனஞ்செய்யும் ஆனந்த நடராசப் பெருமானது எடுத்த திருப்பாதத்தை வணங்கிக் கொண்டு சிவனது சந்நிதியடைக. அங்கு ஆதி சைவ சிவாச்சாரியாரிடம் தேங்காய், பழம் முதலியவற்றைக் கொடுத்து அவர்கள் செய்யும் உபசாரம் அனைத்தையும் ஒன்றிய உள்ளத்தோடு கண்டு (தரிசித்திடுக).

நிறையருட் பாட லாகி நிரம்புதே வாரம் யாரும்
அறைதிரு வாச கஞ்சீரமையிசைப் பாபல் லாண்டு
குறைதவிர் புராண மின்ன கொண்டுறத் துதித்தல் செய்து
மறைபுகல் விபூதி மேனி வளைந்திரு கையால் ஏற்று 6

அருளாளர்களாகிய சைவ சமயாசாரியர்கள் அருளிய தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருத்தொண்டர் புராணம் ஆகிய தமிழ்ப் பாடல்கள் பாடித் துதித்திடவேண்டும். சிவாசாரியார் தரும் விபூதியைத் தாழ்ந்து, இருகரம் நீட்டி வாங்கிக்கொள்ள வேண்டும்.

குறிப்பு : திருக்கோயிலில் ஓதத்தக்க தோத்திரங்கள் தேவாரம், திருவாசகம் முதலிய திருமுறைகளேயாம். இதர பாடல்கள் ஓதத் தக்கனவல்ல. பூசகருக்கு இயன்ற தக்ஷிணை கொடுக்கக்கடவர்.

சிறிதகன்றணுவு மண்ணிற் சிந்திடா வகை தரித்துக்
குறிதரு சோமாக் கந்தர் குரவனு யமரு மையர்
செறிபுகர் முக்த்தே ரம்பர் சேவலங் கொடிப்பி ரானுர்
முறிவறு மிவரைப் போற்றி வலஞ்செயல்முறைமையா மால். 7

பின்பு சிறிது அகன்று விபூதியை நிலத்திலே சிந்தா வண்ணம் அண்ணுந்து "சிவ சிவ" என்று கூறி, நெற்றி முதலிய இடங்களில பூசிக்கொள்க. பின்பு சோமாஸ்கந்தர், (உற்சவ மூர்த்தி), தக்ஷிணு மூர்த்தி, விநாயகர், முருகர் முதலானோரை வணங்கி வலமாகச் செல்லவேண்டும்.

இருகர சலன நீக்கி இயைதரக் குவித்துக் கொண்டு
பொருவரு பெருமான் பாத தாமரை யுளம்பொ ருந்தி
வெருவறச் சிந்தித் தேனும் அவன் துதி விரித்திட் டேனும்
ஒருவரு மிரண்டு நீங்கா தொன்மையி னியற்றி யேனும். 8

(வலம் வரும்போது) இரண்டு கைகளையும் வீசிச்செல்லாது நெஞ்சுக்கு நேராகக்குவித்துக்கொண்டு சிவபெருமானது திருவடித் தாமரைகளைச் சிந்தித்துக்கொண்டோ, தோத்திரங்கள் சொல்லிக்கொண்டோ அல்லது இரண்டும் செய்துகொண்டோ (வலம் வர வேண்டும்)

குறிப்பு : அபிஷேக காலத்தில் உட்பிரகாரத்தில் வலம் வருதல், வணங்குதல் கூடாது. (இது முதல் சுற்று)

அறைபெரும் பத்தி வாய்ந்த அறுபத்து மூவராய
நிறையுடை யரைத்து திக்கி னிகழுந்தற் றுதியின் மேலும்
குறைவிலா மகிழ்ச்சி யம்மான் கூருமற் றதனல் அந்த
முறையுடை யரைச்சிந் தித்து முனிவறத் துதிசெய் தேனும். 9

உலகம் போற்றும் பக்தி வாய்ந்த அறுபத்து மூன்று நாயன்மார்களைத் துதித்தால் அது சிவபெருமானுக்கு அவரைத் துதிப்பதை விடப் பெருமகிழ்ச்சியைக் கொடுக்கும். அத்தகைய சிவனடியார்களைத் துதித்து (வலம் வருக.)

குறிப்பு : (இது இரண்டாவது சுற்று)

இடைவெளி தோற்று ருமல் இனிதடி யெடுத்து வைத்தும்
இடைதர முக்காற் சூழல் விதிமேலு மியம்பா நிற்பர்
கடைபடு குணுங்கே யாவன் கைகளை வீசிச் செல்லின்
உடையிராக் கதனு மார்பின் உறப்பிணித் தடையின் மாதோ.

[வலம் வரும்போது] இடைவெளி விடாமல் அடிமேல் அடி எடுத்து வைத்து மூன்று முறை வலம் வருதல் உத்தமம். அதற்கு மேலும் [ஐந்து, ஏழு, ஒன்பது, பதினைந்து, இருபத்தொன்பது தரமும்] செய்தலும் உண்டு என்பர். கைகளை வீசிச் செல்வோன் பிசாசு எனப் படுவான். கைகளை மார்பில் கட்டிக்கொண்டு செல்வோன் இராக்கதன் எனப்படுவான்.

குறிப்பு : வலம் வரும் ஆவரணத்தில் உள்ள பலிபீடத்தையும் இடபத்தையும் சேர்த்து வலம் வர வேண்டும். அங்குப் பலிபீடமும் இடபமும் இல்லையாயின் அதற்கு வெளிப் பிரகாரத்தில் உள்ள பலி பீடத்தையும் இடபத்தையும் சேர்த்து வலம் வர வேண்டும். சிவலிங்கத்துக்கும் அந்தந்த ஆவரணத்திலுள்ள பலிபீட இடபங்களுக்கும் இடையே போகலாகாது. (ஆவரணம்-சுற்று)

அஞ்சலி செய்து சூழின் அமரனே யாவ னெலென்
றெஞ்சலில் சிவாக மங்கள் இயம்பலின் இந்த வாறே
மஞ்சவிர் கோயில் சூழ்ந்து (ம்) ஆண்டசண்டீசர் பாற்போய்
தஞ்சமென் றிருகை தட்டித் தரிசன பலனை யின்று. 11

கைகளைக் கூப்பித் தொழுவோன் தேவன் எனப்படுவன் என அளவற்ற சிவாகமங்களிற் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு [மூன்றும்முறை வலம் வரும் போது சிவபெருமானால் சண்டேசப்பதம் அருளப்பெற்ற] சண்டேசுரநாயனார் திருச்சந்நிதியை அடைந்து [தாளத்திரயம் செய்து அதாவது மூன்றுமுறை கைகொட்டி] ''சிவபெருமான் தரிசன பலனை''

குறிப்பு : ''கைகாள் கூப்பித்தொ ழீர்'' என்ற திருநாவுக்கரசர் தேவாரமுங் காண்க.

''பெற்றனன் அடியேன்'' என்று பேசி யஞ் சலித்த பின்னர்
அற்றமி லுமையாள் கோயில் அடைந்துப சார மாய
முற்றவும் முன்போல் ஆற்றி முனிவற நோக்கிப் போற்றிக்
குற்றமில் விபூதி யோடு குலவுசெஞ் சாந்து மேற்றே. 12

''அடியனேன் பெற்றனன்'' என்று கூறி வணங்கிக் கொண்டு அம்மையார் கோயிலுக்குச் செல்ல வேண்டும். அங்கு முன்போல உபசாரங்கள் செய்து வணங்கித் துதித்து விபூதியும், செஞ்சாந்தும் (குங்குமம்) பெற்றுக் கொள்ளவேண்டும்.

குறிப்பு: அம்மையார் சந்நிதியிலும் விபூதி கொடுக்கப்பட்டது என்றும், கொடுக்கப்பட வேண்டும் என்றும் இதனால் தெரிகிறது. செஞ்சாந்து என்பது தேவாரத்தில் ' குங்குமக்குழம்பு'' என வருவதால் தூளாகக் கொடுக்காமல் சந்தனம்போல் கொடுக்கப்பட்டது என்றும் தெரிகிறது தற்போதும் அவ்வாறு செய்யலாம்,

உறுவல மாகச் சூழ்போந் துயர்கொடி மரப்பாற் போந்து
மறுவிலட் டாங்கமாக வணக்கமோ ரைங்காற் செய்து
பெறுமுறை யாங்க மர்ந்து பிறங்கிய மூலம் நூறு ★
மறுதிசெ யகோர நூறும் அடைவுறக் கணித்தல் வேண்டும்.

பின்பு வலமாக வந்து கொடிமரத்தின் [கீழ்புறம் வடக்கே தலை வைத்து] அட்டாங்க நமஸ்காரம் ஐந்துமுறை செய்தல் வேண்டும். [பெண்கள் பஞ்சாங்க நமஸ்காரம் செய்தல்வேண்டும்.] பின்பு வடக்கே நோக்கியிருந்து மூல மந்திரத்தை நூறு தரமும், அகோர மந்திரத்தை நூறு தரமும் ஜெபித்துத் திரும்ப வேண்டும்.

குறிப்பு: அட்டாங்க நமஸ்காரமாவது, தலை, கையிரண்டு. செவியிரண்டு, மோவாய், புயங்களிரண்டு என்னும் எட்டு உறுப்பும் நிலத்திலே தோயும்படி வணங்குதல்; அதாவது தலையை வைத்து மார்பு பூமியிலே படும்படி வலக்கையை முன்னும், இடக்கையை பின்னும் நேரே நீட்டி, பின்பு அம்முறையே மடக்கி, வலப் புயமும் இடப்புயமும் மண்ணில் பொருந்தும்படி கைகளை அரையை நோக்க நீட்டி வலக் காதை முன்னும், இடக்காதை பின்னும் மண்ணிலே பொருந்தச் செய்தல்.

பஞ்சாங்க நமஸ்காரமாவது தலை, கையிரண்டு. முழந்தாளிரண்டு என்னும் ஐந்துறுப்பும் நிலத்திலே தோயும்படி வணங்குதல். கிழக்கு வடக்கே கால் நீட்டலாகாது. இவை மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது, பன்னிரண்டு தரமாயினும் பண்ணல் வேண்டும்.

[கொடி மரத்தின் உள் மண்டபங்களில் வீழ்ந்து கும்பிடல் ஆகாது திரும்பும் போது சிவபெருமானுக்கும், இடபதேவருக்கும் புறங்காட்டாது திரும்பல் வேண்டும்]

★ மூலம்—என்பது சைவாசாரியர்பால் தீட்சை பெறும்போது உபதேசிக்கப்பட்ட சிவபெருமானது மூலமந்திரம். அகோரம்—அகோர மந்திரம். சைவ சமயிகள் சமய தீட்சை பெற்றுச் சைவ சமயத்தை வரம்போடு அறிந்து ஒழுகிப் பயன் அடைவார்களாக !

''மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்''



திருக் கோயிலிற் செய்யத் தகாத குற்றங்கள்:-

மலசலங்கழித்தல், எச்சிலுமிழ்தல், தீப நிழல் சிவலிங்க நிழல்களைக் கடத்தல், ஒரு தரம் இரு தரம் வலம் வருதல். ஓடி வலம் வருதல், வேசை முதலியோரைப் புணர்தல், அவரை நினைத்தல், நிர்மாலியத்தை கடத்தல், சிவலிங்கத்தைத் தாண்டல், கோமுகையைக் கடத்தல், ஆடையின்றிப்போதல், காறிச்சளியுமிழ்தல், விபூதிதரியாமை, பலியன்ன மிதித்தல், சிவலிங்கத்துக்கும் பலிபீடத்துக்கும் குறுக்கே போதல், இடபதேவர் தூபி துசத்தம்பம் பலிபீடம் சிவலிங்கம் என்னும் இவற்றின் நிழல்களை மிதித்தல், பிரசவித்தல், இறத்தல், சுத்தமில்லாதிருத்தல், பிறர் மனைவியரை விரும்புதல், கால் கழுவாமை, நித்திரை செய்தல், வெற்றிலைபாக்குத் தின்னுதல், வெற்றிலைத் தம்பல முமிழ்தல், களவெடுத்தல் என்னும் முப்பத்திரண்டும் பிறவுமாம், இதற்குப் பிரமாணம்:—

திருக்கோயி றன்னின்மலஞ் சலம்விடுத லுமிழ்தல்
திருவிளக்குச் சாயையிலிங் கச்சாயை கடத்தல்
ஒருக்காலாய் வலம்வருத லோடிவலம் வருதல்
ஒண்டொடிவே சியர்ப்புணர்த லுற்றவரை நினைத்தல்
மருக்கமழ்நின் மாலியத்தைச் சிவன்றனைக்கோ முகையை
வழிகடத்த லாடையின்றி மருவுதல்கான் றுமிழ்தல்
பெருக்கநீ றணியாமை பெலிப்பற்று மிதித்தல்
பெலிபீடங் குறுக்கிடுதல் பெருமான் சந்நிதியில்.

ஏறுடனே தூபிதுச தண்டுபலி பீடம்
இலங்குமிவை சாயைமிதித் தேகுதல்பொய்ம் மொழிதல்
பேறிழவே யசுசி பிறர் தாரத்தை விரும்பல்
பெரும்புனலா லிருபாதங் கழுவாமை சயனம்
தேறுபா கிலைதினறம் பலமுமிழ்த திருடல்
திருக்கோயி னியமத்தைச் செய்தவத்தோர் தங்கட்
காறணியுஞ் சடைமுடியா ராகமத்திற் சொலுமிவ்
வாறைந்தோ டிரண்டுகுற்ற மாகா வன்றே

— மறைஞான சம்பந்த நாயனர்.

[இக்குற்றங்களை அறியாது செய்தவர் வேதத்திலுள்ள உருத்திர மந்திரத்தை ஆயிரம் உருச்செபிக்கின் அக்குற்றங்கள் நீங்கும்; அம்மந்திரத்துக்கு உரியரல்லாதவர் அகோர மந்திரத்தை ஆயிரமுருச்செபிக்கக் கடவர். இக்குற்றங்களை அறிந்து செய்தவர் தப்பாது நிரயத்து வீழ்வர். அவர்க்குப் பரிகாரமொரு நூலினுமில்லை ]

# கடவுள் வழிபாடு அவசியம்

"கடவுளுடைய" திருவடிகளை அடைதற்காகவே நாம் பிறவி எடுத்தோமாதலால் அத்திருவடிகளைச் சிந்தித்தலும், துதித்தலும், வணங்குதலுமே நமது முக்கியமான கடமையாகும்.

உடம்பு நயப்படுதற்கு உணவும், மனம் நயப்படுதற்கு கல்வியும் வேண்டப்படுதல் போல ஆன்மா நயப்படுதற்குக் கடவுள் வழிபாடு வேண்டப்படும். உடம்பும், மனமும் ஆன்மாவின் கருவிகள். உடம்பு தொழில் செய்தற்கும், மனம் ஆராய்தற்கும் கருவியாயுள்ளவை. கருவிகளினும் பார்க்க கருவிகளையுடையவன் மேலானவன். ஆதலால் உடம்பினும், மனத்தினும் மேலானதே ஆன்மா ஆகவே, உடம்பை நயப்படுத்துவதற்கு வேண்டிய உணவினும், மனத்தை நயப்படுத்துவ தற்கு வேண்டிய கல்வியினும் மேலானது ஆன்மாவை நயப்படுத்துவதாகிய கடவுள் வழிபாடு. அன்றியும் இவைகள் ஆன்மாவுக்குக் கருவியாயிருத்தலால், இவற்றின் முக்கியமான தொழில் ஆன்மாவுக்கு வேண்டிய கடவுள் வழிபாட்டில் ஈடுபடுதலேயாம். "திருக்கோயிலை வலம்வந்து சுவாமிக்குப் பூவைச் சாத்தித் தோத்திரம் செய்யாத உடம்பினாற் பயனில்லை" என்றார் திருநாவுக்கரசு நாயனார்,

"கடவுளுடைய திருவடிகளைத் தொழுதற்குத் துணையாய் நில்லாத கல்வியினாற் பயனில்லை" என்றார் திருவள்ளுவ நாயனார்.

"ஆக்கையாற் பயனென் —அரன்
கோலல் வலம் வந்து
பூக்கையாலட்டிப் போற்றி என்னாதவிவ்
வாக்கையாற் பயனென்"

— திருநாவுக்கரசு நாயனார்

"கற்றதனாலாய பயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்"

— திருவள்ளுவநாயனார்

Book-Post

